# திருப்புகழமிர்தம்

கீலக ஆனி



ஆசிரியர் :

## கிருபானந்தவாரி

திருப்புகழமிர்தம் காரியாலயம்
89, சிங்கண்ண செட்டித் தெரு, சென்னை-2.

உ

முருகா

## ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் அவதார நல்விழா

முழுமுதற் கடவுளாம் முருகப்பெருமான் திருவருளை முழுதும் பெற்று அவ்வருளை ஏனோரும் பெறும் பொருட்டு பதினாறாயிரம் தமிழ் வேதத் திருப்புகழ்ப்பாடல்களையும் பிற நூல்களையும் அருளிய ஸ்ரீ அருணகிரிநாதசுவாமிகளின் அவதார நல்விழா நாளது ஆண்டு ஆனி மாதம் 26-ஆம் தேதி (9-7-68) செவ்வாய்க் கிழமையன்று பின் வரும் இடங்களில் சிறப்பாகக் கொண்டாடப் பெறும். அந்நன்னாளில் விரதமிருந்து வழிபடுவோர் எல்லா நலன்களும் பெற்று இனிது வாழ்வர்.

1. காங்கேயநல்லூர்த் திருப்புகழ்ச் சபையாரால் காங்கேய நல்லூர் முருகன் கோயிலில்.
2. மதுரைத் திருப்புகழ்ச் சபையாரால் ஸ்ரீ மீனாக்ஷியம்மன் கோயிலில் தெற்கு ஆடி வீதியில் உள்ள திருப்புகழ்ச் சபையில்.
3. திருச்சி—குமார வயலூர்த் திருக்கோயிலில்.
4. விராலிமலையில் திருப்புகழ்ச் சபையாரால்.
5. நெல்லைத் திருப்புகழ்ச் சபையாரால், திருநெல்வேலி தொண்டர்கள் நயினார் கோயிலில்.
6. குளித்தலை ஸ்ரீ அருணகிரிநாதர் விழாக்குழுவினரால் திருக் கடம்பர் கோயிலில்.

## சந்தா நேயர்களுக்கு

நமது திருப்புகழமிர்த இதழ்கள் மாதா மாதம் ஆங்கிலத் தேதி 16 அளவில் தபாலில் சேர்க்கப்படுகின்றன. நன்கு சரி பார்த்த பின்னரே தபாலில் சேர்க்கப்படுவதால் இவ்விடம் தவறு நேர இட மில்லை. ஆகவே தபால் இலாகாவில் ஏற்படும் குறை காரணமாக இதழ்கள் கிடைக்கப் பெறாத அன்பர்கள் அந்த ஆங்கில மாதம் 25 தேதி வரை பார்த்திருந்து அது வரை கிடைக்கவில்லையாகில் பின்னரே எமக்கு எழுத வேண்டும். அந்தந்த ஆங்கில மாத முடிவுக் குள் (30 அல்லது 31 தேதிக்குள்) தெரிவிக்காத அன்பர்கள் பின்னர் இதழ் ஒன்றுக்கு 35 காசுகள் வீதம் செலுத்தியே பெறலாம். குறிப் பிட்ட அளவு பிரதிகளே அச்சிடப்படுவதால் பிரதிகள் கைவசம் இருப்பதை அநுசரித்தே அனுப்பிவைக்கப்படும். ஆங்கில மாதம் 25 தேதிக்குள் பிரதிகள் கிடைக்க வில்லையென்று எழுதினால்கவனிக்கப் படமாட்டாது. அடிக்கடி இதழ்கள் கிடைக்கப் பெறாத நிலையில் உள்ள வர்கள் அந்தந்த வட்டார தபால் அதிகாரிகளுக்கு எழுதி ஒழுங்கு செய்துகொள்ள வேண்டும்.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

ACC·NO. 34330

உ

ஓம் குஹாய நம :



# திருப்புகழமிர்தம்

All Rights Reserved

"குருப்புகழை மேவுகின்ற கொற்றவன் ருள்போற்றுந்
திருப்புகழைக் கேளீர் தினம்"

மலர் 33 | கீலக ஷூ—ஆனி மீ ஜூன் 1968 | இதழ் 3

## திருப்புகழ்

### திருவானைக்கா

கருமுகில்திர ளாகக் கூடிய
இருளெனமரு ளேறித் தேறிய
கடிகமழள காயக் காரிகள் புவிமீதே
கனவியலிலை யோலைக் காதிகள்
முழுமதிவத னேரப் பாவைகள்
களவியமுழு மோசக் காரிகள் மயலாலே

பரநெறியுண ராவக் காமுகர்
உயிர்பலிகொளு மோகக் காரிகள்
பகழியைவிழி யாகத் தேடிகள் முகமாயப்
பகடிகள்பொரு ளாசைப் பாடிகள்
உருவியதன பாரக் கோடுகள்
படவுளமழி வேனுக் கோரருள் புரிவாயே

மரகதவித நேர்முத் தார்நகை
குறமகளதி பாரப் பூண்முலை
மருவியமண வாளக் கோலமு முடையோனே

வளைதருபெரு ஞாலத் தாழ்கடல்
முறையிடநடு வாகப் போயிரு
வரை தொளைபட வேல்விட்டேவிய அதிதீரா

அரவணை தனி லேறிச் சீருடன்
விழிதுயில்திரு மால்சக் ராயுதன்
அடியிணைமுடி தேடிக் காணவும் அரிதான
அலைபுனல்சடை யார்மெச் சாண்மையும்
உடையதொர்மயில் வாசிச் சேவக
அழகியதிரு வானைக் காவுறை பெருமாளே.

## பதவுரை

மரகத விதம் நேர்=பச்சை நிறமுடையவளும், முத்து ஆர் நகை=முத்துக்கள் போன்ற பற்களையுடையவளும் ஆகிய, குற மகள்=குறவர் குலமகள் வள்ளிபிராட்டியின், அதி பார பூண் முலை மருவிய=அதிக பாரமும் அணிகலமும் உள்ள தனங்களைத் தழுவிய, மணவாள கோலமும் உடையோனே=திருக்கல்யாண கோலம் உடையவரே! பெருஞாலத்து வளை தரு=பெரிய பூமியைச் சூழ்ந்துள்ள, ஆழ்கடல் முறை இட=ஆழமான சமுத்திரம் முறையிடவும், நடு ஆகப் போய்=நடுவில் சென்று, இரு வரை தொளை பட=பெரிய கிரவுஞ்ச கிரி தொளை யாகுமாறும், வேல் விட்டு ஏவிய=வேலாயுதத்தைச் செலுத்தி அனுப்பிய, அதி தீரா=பெரிய தீர மூர்த்தியே! அரவு அணைதனில் ஏறி=பாம்பணையின் மீது ஏறி, சீர் உடன் விழி துயில்=சிறப்பாக அறிதுயில் புரிகின்றவரும், திருமால்= திருமாலும், சக்ர ஆயுதன்=சக்கராயுதத்தை யேந்தியவருமாகிய நாராயணர், அடி இணை முடி தேடி காணவும் அரிது ஆன=இரு திருவடிகளின் முடிவைத் தேடிக் காண்பதற்கு அருமையாயிருந்த, அலைபுனல் சேர் சடையார்=அலையுடன் கூடிய கங்கா நதியைச் சூடிய சடையினராகிய சிவபெருமான், மெச்சு ஆண்மையும் உடையது=மெச்சிப் புகழ்கின்ற வலிமையுடைய, ஓர் மயில் வாசி சேவக=ஒப்பற்ற மயில் என்னும் குதிரையைக் கொண்ட ஆற்றலுடையவரே! அழகிய திரு ஆனைக்கா உறை=அழகிய திருவானைக்காவில் எழுந்தருளிய, பெருமாளே=பெருமையிற் சிறந்தவரே! கரு முகில்=கரிய மேகங்கள், திரள் ஆகக் கூடிய இருள் என=கூட்டமாகக் கூடிய இருள் என்று சொல்லும்படியான, மருள் ஏறி தேறிய=மயக்கம் நிறைந்து விளக்கமுற்றதும். கடிகமழ்=நறுமணம் வீசுவதுமான, அளக ஆயக்காரிகள்=கூந்தலையும் தோழியர்களையும் உடையவர்கள்; புவி மீதே=இந்தப் பூமியில், கனவிய விலை ஓலை காதிகள்=மிகுந்த விலை கொண்ட தோட்டினை யணிந்த காதை

யுடையவர்கள், முழுமதி நேர் வதன அ பாவைகள்=முழுமதியை யொத்த முகத்தையுடைய அந்தப் பொது மாதர்கள். களவிய முழு மோசக்காரிகள்=கள்ளத்தனமுடைய முழு மோசக்காரிகள்; மயலாலே பர நெறி உணரா அ காமிகள்=ஆசையினால் மேலான வழியை யறியாத அந்தக் காமிகளின், உயிர் பலி கொளும் மோகக் காரிகள்=உயிரையே பிச்சையாகக் கொள்ளுகின்ற ஆசைக்காரிகள், பசழியை விழியாக தேடிகள்=அம்பையே கண்ணாகத் தேடிவைத் துள்ளவர்கள், முகம் மாய பகடிகள்=முகத்தால் பாசாங்கு செய் கின்ற வெளி வேஷக்காரிகள், பொருள் ஆசைப் பாடிகள்=பொருள் மீது ஆசை கொண்டுள்ளவர்களாகிய பொது மாதர்களின், உருவிய தன பாரகோடுகள் பட=அழகிய கொங்கைகள் என்னும் பாரமாகிய மலைகள் மார்பில் தைக்க, உளம் அழிவேனுக்கு=உள்ளம் அழிகின்ற எனக்கு, ஓர் அருள் புரிவாயே=ஒப்பற்ற திருவருளைச் செய்வீராக.

## பொழிப்புரை

பச்சை நிறமும், முத்தனைய பற்களும் உடைய குறவர்குல மகளாகிய வள்ளி நாயகியின், அதிக பாரம் உள்ள—அணிகலம் பூண்ட தனங்கள் என்னும் மலைகள் மார்பில் பொருந்திய மணவாளத் திருக்கோலம் உடையவரே! உலகைச் சூழ்ந்துள்ள ஆழ்ந்த கடல் முறையிட, நடுவாகப் போய் பெரிய கிரவுஞ்சமலை தொளைபடுமாறு வேலை விடுத்த பெரிய தீரமூர்த்தியே! அலைகளை யுடைய கங்கா நதியைச் சூடிய சடைமுடிச் சிவபெருமான் மெச்சு கின்ற ஆண்மை படைத்த மயிலாகிய புரவியையுடைய பராக் ரமரே! அழகிய திருவானைக்காவில் எழுந்தருளிய பெருமிதம் உடையவரே! கருமேகங்கள் திரண்டது போன்று இருளோ என்னும்படி மருண்டு தெளியும்படி நறுமணங் கமழும் கூந்தலை யும் தோழியர்களையும் உடையவர்கள், இப்பூமியின்கண் மிகுந்த விலை கொண்ட தோட்டினையணிந்த காதையுடையவர்கள்; பூரண சந்திரனையொத்த முகமுடைய மாதர்கள்; கள்ளத்தன முடைய முழு வஞ்சகியர்கள்; ஆசையினால் மேலான நல்வழியை யறியாத காமுகர்களின் உயிரைப் பலியாகக் கொள்ளும் மோகத் தினர்கள்; அம்பையே கண்ணாகக் கொண்டவர்கள்; முகத்தினால் பாசாங்கு செய்கின்ற வெளி வேஷக்காரிகள்; பொருளாசை கொண்டவர்களாகிய பொதுமாதர்களின், அழகிய தனபாரங் களாகிய மலைகள்பட உள்ளம் அழிகின்ற அடியேனுக்கு ஒப் பற்ற திருவருளைச் செய்வீராக.

## விரிவுரை

இத்திருப்புகழில் முதல் நான்கு அடிகள் விலைமாதர்களின் செயல்களைக் கூறுகின்றன.

**மணவாளக் கோலமுமுடையோனே:—**

முருகவேள் வள்ளியுடன் எப்போதும் கல்யாண கோலத்துடன் காட்சி தருவார்.

"கலியாண சுபுத்திரனுகக் குறமாது தனக்கு விநோத"

—(நிலையான) திருப்புகழ்.

**அரவணை தனிலேறிச் சீருடன் விழிதுயில் திருமால்:—**

வெப்பமான இடத்தில் கண் துயில முடியாது. குளிர்ந்த இடத்தில் சுகமாகத் தூக்கம் வரும். நாராயணர் பாற்கடலில் பாம்பணையில் படுத்திருக்கின்ருர்.

பாற்கடல் குளிர்ச்சியானது; பாம்பு சந்தனம் போல் குளிர்ந்திருக்கும். இந்த அரிய குளிர்ச்சியில் திருமால் யோக நித்திரை புரிந்து உலகங்கட்கு அருள் புரிகின்ருர்.

**சடையார் மெச்சாண்மையுமுடையதோர் மயில்:—**

சிவபெருமான் மெச்சிப் புகழ்கின்ற பேராற்றல் படைத்தது மயில். அதன் பெருமை அளவிடற்கரியது.

## கருத்துரை

திருவானைக்காவுறை தேவனே! மாதர் மயலற அருள் செய்.

# திருப்புகழ்

உரைக்கா ரிகைப்பா லெனக்கே முதற்பே
ருனக்கோ மடற்கோவை யொன்றுபாட
உழப்பா திபக்கோ டெழுத்தா ணியைத்தே
டுனைப்பாரி லொப்பார்கள் கண்டிலேன்யான்

குரைக்கான வித்யா கவிப்பூ பருக்கே
குடிக்காண் முடிப்போடு கொண்டுவாபொன்
குலப்பூ ணிரத்நா திபொற்றூ செடுப்பா
யெனக்கூ றிடர்ப்பாடின் மங்குவேனே

அரைக்காடை சுற்ருர் தமிழ்க்கூட லிற்போய்
அனற்கே புனற்கேவ ரைந்தஏடிட்
டறத்தா யெனப்பேர் படைத்தாய் புனற்சே
லறப்பாய் வயற்கீழ மர்ந்தவேளே

திரைக்கா விரிக்கே கரைக்கா னகத்தே
சிவத்யான முற்றேர்சி லந்திநூல்செய்
திருக்கா வணத்தே யிருப்பா ரருட்கூர்
திருச்சால கச்சோதி தம்பிரானே.

## பதவுரை

அரைக்கு ஆடை சுற்ருர் = இடுப்பில் துணி கட்டாதவர்களாகிய சமணர்கள் மிகுதியாக இருந்த, தமிழ் கூடலில் போய் = தமிழ் வளர்ந்த மதுரையம்பதிக்குச் சென்று, அனற்கே = நெருப்பிலும், புனற்கே நீரிலும், வரைந்த ஏடு இட்டு = பதிகம் எழுதிய ஏட்டினை யிட்டு, அறத்தாய் எனப்பேர் படைத்தாய் = அறப்பெருந்தலைவன் என்ற புகழைப் பெற்றவரே! புனல் சேல் அற பாய் = தண்ணீரில் சேல் மீன்கள் நிரம்பவும் பாய்கின்ற வயல் கீழ் அமர்ந்த வேளே = வயலூரில் வாழ்கின்ற செவ்வேளே, திரை காவிரிக்கே கரைக்கே = அலைகள் வீசு கின்ற காவிரி நதியின் கரையில், கானகத்தே = காட்டின் கண், சிவத் யானம் உற்ற = சிவத்தைத் தியானித்துக் கொண்டிருந்த, ஓர் சிலந்தி = ஒப்பற்ற சிலந்தி, நூல் செய்திரு காவணத்தே இருப்பார் = தனது வாய் நூலினால் செய்த அழகிய பந்தரின்கீழ் இருப்பவரும், அருள்கூர் திரு சால கசோதி = அருள் மிகுந்த அழகிய பலகணி வழியாய் சோதி போல் காட்சி தருபவரும் ஆகிய சிவபிரானுக்கு, தம்பிரானே = தலைவராய் விளங்குபவரே! உரை காரிகை பால் எனக்கே முதல் பேர் = சொல்லப் படுகின்ற ''காரிகை'' என்னும் யாப்பிலக்கண நூலில் சமர்த்தன் என்ற முதன்மையான பேர் எனக்கேயுண்டு; உனக்கோ = உன் பேரில், மடல் கோவை ஒன்று பாட = மடல் கோவை யென்னும் பிரபந்தவகை ஒன்று பாடுவதற்கு, உழப்பாது = காலங்கடத்தாது, இப கோடு, எழுத்தாணியை தேடு = யானைக் கொம்பினால் செய்த எழுத்தாணியைத் தேடி எடு; உனை பாரில் ஒப்பார்கள் கண்டிலேன் யான் = உனக்கு இப்பூமியில் ஒப்பானவர்களை நான் பார்க்கவில்லை, குரைக்கு ஆன = பெருமைக்கு உரிய, வித்யா கவிப்பூபருக்கே = வித்தையில் வல்ல கவியரசர் களுக்கே, குடி காண் = நீ புகலிடமாக விளங்குகின்றாய், பொன் முடிப் போடு கொண்டுவா = பொற்காசுகளை முடிந்த முடிப்புடன் கொண்டு வா, குல பூண் = சிறந்த அணிகலன்களையும், ரத்ன ஆதி = இரத்தினம் முதலியவற்றுடன், பொன் தூசு எடுப்பாய் = பொன் இழையுடன் கூடிய ஆடைகளையும் எடுத்துக் கொண்டு வா, என கூறு இடர்பாடில் மங்குவேனோ = என்றெல்லாம் கூறுகின்ற துன்பச் சுழலில் அடியேன் வாட்டம் அடையலாமோ?

## பொழிப்புரை

இடையில் உடை உடுக்காதவர்களாகிய சமணர்கள் மிகுதி யாக உறைந்த மதுராபுரிக்குச் சென்று, திருப்பதிகங்களை எழுதி,

நெருப்பிலும் நீரிலும் இட்டு, அறப்பெருஞ் செல்வன் என்று புகழ் பெற்றவரே! நீரில் சேல்மீன்கள் மிகுதியாகப் பாய்கின்ற வயலூரில் வாழும் செவ்வேட் பரமனே! அலைகள் வீசுகின்ற காவிரி நதியின் கரையில் உள்ள கானகத்தில் சிவத் தியானம் புரிந்திருந்த ஒரு சிலந்தி தன் வாய் நூலினால் செய்த பந்தலின் கீழ் இருப்பவரும், அருள் மிகுந்த அழகிய சாலகத்தின் வழியே சோதி வடிவாய் காட்சி தருபவருமாகிய சிவமூர்த்திக்குத் தலைவராய் விளங்குபவரே! சொல்லப்படுகின்ற யாப்பருங்கலக் காரிகையில் சமர்த்தன் என்று எனக்குத்தான் முதன்மையான பேருண்டு; உன் பேரில் "மடல்" "கோவை" என்ற நூல்களில் ஒன்று பாடுவேன்; காலங் கடக்காது யானைத் தந்தத்தால் செய்த எழுத்தாணியை எடுத்துக் கொண்டு வா; உனக்கு நிகரானவர் இவ்வுலகில் இல்லை; பெருமைக்கு உரிய வித்தையில் வல்ல கவியரசர்கட்கு நீ ஒரு புகலிடம்; பொன் முடிப்பைக் கொண்டு வா; உயர்ந்த அணிகலன்களையும், இரத்தினம் முதலியவைகளை யும், பொற்சரிகையாடையும் கொண்டு வா;" என்று கூறும் துன்ப நிலையில் அடியேன் வாட்டம் அடையலாமோ?

## விரிவுரை

**உரைக்காரிகை:—**

காரிகை என்பது ஒரு யாப்பிலக்கண நூல். இது பதினோ ராம் நூற்றாண்டில் இருந்த அமிர்தசாகரர் இயற்றியது. இது அருணகிரியார் காலத்துக்கு முற்பட்ட நூல். புலவர்கள் காரிகை கற்றுக் கவிபாடுவார்கள்.

பொருளாளரிடம் கவிபாடிப் புகழ்ந்து கூறி, பொருள் பெறுமல் துன்பமும் அடைவார்கள்.

"காரிகை கற்றுக் கவிபாடுவதினும் பேரிகை கொட்டிப் பிழைப்பது நன்றே" என்று ஒரு புலவன் மனம் நொந்து கூறினன்.

**எனக்கே முதற்பேர்:—**

"காரிகை நூலில் வல்லவன் என்று என்னையே புகழ்ந்து கூறுகின்றனர்கள்" என்று தன்னைத்தானே வியர்து கொள்வது.

**உனக்கே மடற்கோவை யொன்றுபாட:—**

மடல் கோவை என்பவை தமிழ்ப் பிரபந்த வகைகள்.

மடல் என்பது விரும்பிய காதலியை நான் அடைவேன் என்று மடல் ஏறுவது. கலிவெண்பாவில் பாடும் ஒருவகை நூல் மடல். வருணகுலாதித்தன் மடல் என்ற நூலால் அறிக.

கோவை—அகப்பொருள் நூல்.

வழிபடு கடவுளையேனும், ஆதரித்தவர்களையேனும் பாட்டுடைத் தலைவனாக அமைத்துப் பாடுவது. பல துறைகள் இதில் அமையப்பெறும்.

திருச்சிற்றம்பலக்கோவை, தஞ்சைவாணன் கோவை, சந்திரவாணன் கோவை முதலியன கோவை நூல்களில் சிறந்தவை.

**உழப்பாது :—**

உழத்தல்—காலந்தாழ்த்தல்.

காலங் கடத்துபவனைப் பார்த்து, ''ஏன் உழப்புகின்றாய்?'' என்கின்ற உலக வழக்காலும் அறிக.

**இபக்கோ டெழுத்தாணியைத் தேடு :—**

விலையுயர்ந்த யானைக் கொம்பினால் விசித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய எழுத்தாணியைச் செய்வர்.

புலவன் பொருளாளனைப் பார்த்து, ''உயர்ந்த எழுத்தாணியைக் கொண்டு வா'' என்று கேட்கின்றான்.

**உனைப்பாரிலொப்பார்கள் கண்டிலேன்யான் :—**

தனவந்தனைப் பார்த்துப் புலவன், ''உனக்கு நிகராக இப்பூதலத்தில் ஒருவரையும் நான் கண்டேனில்லை'' என்று கூறிப் புகழ்கின்றான்.

**குரைக்கான வித்யா கவிப்பூபருக்கே குடிக்காண் :—**

குரைக்கு—பெருமைக்கு. பெருமைக்கு உரிய கல்வியில் சிறந்த கவியரசர்கட்கு நீதான் புகலிடம். புலவர்களைக் காக்கும் கருணா நிதி நீ'' என்று புகழ்வர்.

**முடிப்போடு கொண்டுவா பொன் :—**

தனவந்தனைப் பார்த்து, ''பொற்காசுகள் முடிந்த பொற்கிழியைக் கொண்டு வா'' என்று உரிமையுடனும் அதிகாரத்துடனும் மிடுக்குடனும் கேட்கின்றதாக இந்த வரி கூறுகின்றது.

**குலப்பூணிரத்நாதி பொற்றூ செடுப்பாய் :—**

சிறந்த தங்க நகைகள், இரத்ன மாலைகள், பொன்னுடைகள் இவைகளைக் கொண்டு வந்து கொடு என்று புலவன் கேட்கின்றான்.

**இடர்ப்பாடின் மங்குவேனே :—**

தமிழ் படித்து, இறைவனைப் பாடாது, பொருளுக்காக மனிதர்களைப் பாடித் திரியும் இத் துன்ப நிலையில் வாட்டமடைதல் கூடாது.

**அரைக்காடை சுற்றார் :—**

திகம்பர சமணம் என்று சமணத்தில் ஒரு பிரிவு உண்டு. அவர்கள் இடுப்பில் ஆடையுடுக்க மாட்டார்கள். பாயுடுத்துத்

திரியும் சமணரும் உளர். அம்மணமாயிருப்பதால் அம்மதம் அமணம் எனப்பட்டது.

''ஆடை ஒழித்தங் கமணே திரிந்துண்பர்'' —சம்பந்தர்.

''பாயன்றியுடாப் பேதைகள்'' —(தவர்வாட்) திருப்புகழ்.

**தமிழ்க்கூடலிற் போய் :—**

சங்கத்தின் மூலம் தமிழை வளர்த்தபடியால் தமிழ்க்கூடல் என்றார்.

திருஞானசம்பந்தர் வேதாரண்யத்தில் எழுந்தருளியிருந்த போது, மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும் மதுரைக்கு வருமாறு அவருக்கு அழைப்பு அனுப்பினார்கள். சமண் சமயத்தை விலக்கி, சைவ சமயத்தை நிலைநாட்டும் பொருட்டு திருஞானசம்பந்தர் அடியார் குழாத்துடன் மதுரைக்கு எழுந்தருளினார்.

**அனற்கே புனற்கே வரைந்த யேடிட்டு :—**

சமணர்களுடன் வாதிட்டு, தத்தம் சமயங்களின் உண்மையை நிலைநாட்டும் பொருட்டு, அனலில் ஏடு இடுவது என்று முடிவு செய்தார்கள்.

சமணர்கள் இட்ட ஏடு கரியாயிற்று.

''போகமார்த்த பூண்முலையாள்'' என்று தொடங்கும் திருநள்ளாற்றுத் திருப்பதிகத்தைப் பிள்ளையார் இட்டருளினார். அது வேகாது பச்சென்றிருந்தது.

மற்றும் வையையாற்றில் ஏட்டையிடுவது; எந்த ஏடு எதிரேறுகின்றதோ அந்த ஏட்டின் சமயம் மெய்ச்சமயம் ஆகும் என்று முடிவு செய்தார்கள்.

சமணர்கள் இட்ட ஏடு கடலை நோக்கி ஓடியது. திருஞான சம்பந்தர், ''வாழ்க அந்தணர்'' என்ற திருப்பாசுரம் பாடி அதனை எழுதிய ஏட்டை நீரில் இட்டருளினார். அது ஆற்றில் எதிரேறிச் சென்றது. அமணர்கள் தோல்வியுற்றார்கள்.

அருமறைச் சிச்சிலிப் பண்டருந்தத் தேடும்
அதுபோலன்றிது என்றும் உளதாம்; உண்மைப்
பரபதமும் தற்பதமும் பரனே யன்றிப்
பலரில்லை என்றெழுதும் பனுவல்; பாரில்
எரியிடை வேவாது ஆற்றெதிரே யோடும்
என்புக்கும் உயிர்கொடுக்கும் இடுநஞ்சாற்றும்
கரியை வளைவிக்கும் கல்மிதக்கப் பண்ணும்
கரா மதலை கரையிலுறக் காற்றுங் காணே.

**அறத்தாயெனப் பேர் படைத்தாய் :—**

திருஞானசம்பந்தர், பரசமயத்தை நிராகரித்து, சிவசமய தருமத்தை நிலைநாட்டினார். "சிவதரும ஸ்தாபகர்" என்று பேர் பெற்றார்.

**புனற்சே லறப்பாய் வயற்கீ ழமர்ந்தவேளே :—**

அற—மிகுதியாக. நீரில் மிகுதியாக மீன்கள் பாய்கின்ற வயல்கள் சூழ்ந்த திருத்தலம் வயலூர். இத்தலம் முருகனுக்கு உகந்தது.

**திரைக் காவிரிக்கே :—**

திரை—அலை. காவிரி ஏழு நதிகளில் ஒன்று மிகுதியான நீர் பெருக்கெடுத்து ஓடும். அலைகள் மிகவும் வேகமாக மோதும் நதி.

"மனித்தராதி சோணாடு
தழைக்க மேவு காவேரி
மகப்ரவாக பானீயம் அலைமோதும்"

—(அனித்த) திருப்புகழ்.

**கரைக் கானகத்தே :—**

காவிரி நதியின் வடகரையில் உள்ள அழகிய காடு. அக்கானகத்தில் வெண்ணாவல் மரத்தடியில் சிவபெருமான் எழுந்தருளியிருக்கின்றார்.

**சிவத்யானமுற்றோர் சிலந்திநூல் செய் திருக்காவணத்தே யிருப்பார் :—**

சிவகணங்களில் புட்பவந்தன், மாலியவான் என்ற இருவர் சிவமூர்த்திக்குப் பணிவிடை புரிகின்றவர்கள்.

சிவப்பணியில் ஒருவர்மீது ஒருவர் பொறாமை கொண்டனர். புட்பவந்தன் மாலியவானைச் சிலந்தியாகுமாறு சபித்தான்; மாலியவான் புட்பவந்தனை யானையாகுமாறு சபித்தான். அச்சாபங் காரணமாக இருவரும் யானையும் சிலந்தியுமாகப் பிறந்தார்கள்.

வெள்ளானை (புட்பவந்தன்) காவிரியின் வடகரையில் வெண்ணாவல் மரத்தடியில் எழுந்தருளியுள்ள சிவலிங்கத்தை மிகுந்த அன்புடன் வழிபட்டு வந்தது. தினந்தோறும் காவிரியில் நீராடி, துதிக்கையால் நீர் முகந்து சிவலிங்கத்துக்கு அபிஷேகம் புரியும்; துதிக்கையால் மலர் கொய்து சாத்தும்.

சிலந்தியும் அந்தச் சிவலிங்கத்தைக் கண்டு அன்பு மேலிட்டது. சிவலிங்கத்தின்மீது சருகுகள் உதிர்வதைக் கண்டு தரியாது, தன் வாய் நூலால் பந்தர் இட்டது. கோயில் போலவும் கோபுரம் போலவும் அமைத்து சிவத்யானஞ் செய்தது.

சிலந்தி வாய்நூலால் பந்தர் முதலியன அமைத்ததைக் கண்ட யானை வருத்தமுற்றது. எச்சில் நூலால் இப்படிச் செய்

வது அநுசிதம் என்று எண்ணிற்று. அதனைத் தும்பிக்கையால் அழித்தது.

மறுநாள் அது கண்டு சிலந்தி வருத்தமுற்றது. மறுபடியும் நூலினல் பந்தர் அமைத்து வழிபட்டது. யானை மறுநாள் அதனை அழித்தது. இவ்வாறு நாள்தோறும் தான் வருந்தி யமைக்கும் நூல் கோயிலை யழிக்கும் யானைமீது சிலந்திககுச் சீற்றம் உண்டாயிற்று.

ஒரு நாள் நூல் பந்தரிட்டு அதில் ஒருபுறம் ஒளிந்திருந்தது. யானை வந்து தன் தும்பிக்கையால் அழிக்கும்போது, சிலந்தி தும்பிக்கையின் வழியே உட்புகுந்து குடைந்தது. சிலந்தியின் கடியைத் தாங்காத யானை நிலத்தில் வீழ்ந்து புரண்டு மாண்டது. யானையின் தாக்குதலினல் சிலந்தியும் மாண்டது.

இறந்த யானை சிவகணம் ஆயிற்று. மாண்ட சிலந்தி சோழர் குலத்தில் பிறந்தது. காலங்கடந்து பிறந்ததனல் கண் சிவந்து பிறந்தது. அதனல் கோச்செங்கண்ணன் எனறு பேர் பெற்றது.

கோச்செங்கட் சோழர் சிவபெருமானுக்குப் பல திருக் கோயில்கள் புதுக்கினர். பழைய வாசனை காரணத்தால் யானை புகாத வண்ணம் மாடக் கோயிலாகவே புதுக்கினர்.

யானை பூசித்ததனல் இத்தலம் திருவானைக்கா எனப் பெற்றது.

''எண்டோள் ஈசற்கு
எழில்மாடம் எழுபதுசெய்துலகம் ஆண்ட
திருக்குலத்து வளச்சோழன்''

—பெரிய திருமொழி

புத்தியினல் சிலந்தியுந்தன் வாயின்நூலால்
பொதுப்பந்தர் அதுஇழைத்துச் சருகால்மேய்ந்த
சித்தியினல் அரசாண்டு சிறப்புச்செய்ய
சிவகணத்துப் புகப் பெய்தார்; திறலால் மிக்க
வித்தகத்தால் வெள்ளானை விள்ளா அன்பு
விரவியா கண்டதற்கு வீடுகாட்டிப்
பத்தர்களுக் கின்னமுதாம் பாசூர் மேய
பரஞ் சுடரைக் கண்டடியேன் உய்ந்தவாறே.

சிலந்தியும் ஆனைக்காவில்
திருநிழற் பந்தர் செய்து
உலந்தவண் இறந்த போதே
கோச்செங்க ணனுமாகக்

கலந்தநீர்க் காவிரிசூழ்
சோணாட்டுக் சோழர் தங்கள்
குலந்தனில் பிறப்பித் திட்டார்
குறுக்கை வீரட்டனாரே. —அப்பர்.

இந்த வரலாறு திருவானைக்கா தலப்புராணத்திலும், திருவானைக்கா உலாவிலும், பெரிய புராணத்திலும் விரிவாக வருகின்றது.

திருச்சாலகச் சோதி :—

திருவானைக்கா கோவிலில் சுவாமி சந்நிதிக்கு நேரே மேற்கில் உள்ள சுவற்றில் ஒன்பது துவாரங்களுடன் அமைந்த சாளரம் ஒன்றுண்டு.

இதன் வழியாக இறைவனைத் தரிசித்தோர் நவதீர்த்தங்களில முழுகிய பயனைப் பெறுவார்கள்.

''அந்தண்மடவார் அனவரதம்
சிந்தித்துச்சேவிக்கும்
எல்லைத் திருச்சாலக நலமும்''
''பரமன் சிறக்கும் திருச்சா
லகத்தொளிர்தேவேசன்
கறைகண்டன் என்னானைக்கன்று.''
—திருவானைக்காவுலா. 57–75

## கருத்துரை

ஆனைக்கா மேவிய அண்ணலே! தமிழால் உன்னைப்பாட அருள் செய்.

# ஆறுமுகமான விளைவு

திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள்

முருகப் பெருமானுடைய பக்தர்களுக்கு ஆறு என்ற எண்ணில் மிக்க விருப்பம் இருக்கும். அவனுடைய திருமுகங்கள் ஆறு. அவனுடைய மந்திரத்தில் உள்ள எழுத்துக்கள் ஆறு, அவன் எழுந்தருளியிருக்கும் படை வீடுகள் ஆறு. கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு, மேல், கீழ் என்னும் ஆறு திசைகளிலும் அவனுடைய திருமுகப்பார்வை செல்லுகிறது. ஆறு ஆதாரங்களிலும் அவனுடைய அருள் பகுதி இருந்து காக்கிறது. ஆறு சமயங்களாலும் போற்றப்பெறும் இறைவனும் அவனே.

இவ்வாறு முருகனுடைய தொடர்பு பெற்ற பொருள்களில் ஆறு என்ற தொகை மிகுதியாக இருப்பதனால் அந்த எண்ணையே புனிதமுடையதாக அன்பர்கள் கருதுவார்கள்.

திருவிளையாடற்புராணத்தில் பரஞ்சோதி முனிவர் முருகப் பெருமானுக்கு வணக்கம் சொல்கிறார். அப்பெருமான் வேலெடுத்து நிகழ்த்திய வீரச் செயல்களைப் பாடுகிறார். அப்படிப் பாடுகையில் ஆறு விதமான நிகழ்ச்சிகள் நிகழ்ந்தன என்று அமைக்கிறார். ஆறுமுகமுடைய பரம்பொருள் தன்னுடைய வீரச் செயலால் ஒரே சமயத்தில் ஆறு விளைவுகள் உண்டாகும்படி செய்தது பொருத்தமாக இருக்கிறது. பரஞ்சோதி முனிவர் சொல்லும் ஆறு விளைவுகளை இங்கே பார்க்கலாம்.

முருகனை, 'மறம் குலவு வேல் எடுத்த குமரவேள்' என்று சொல்கிறார் அவன் வேலெடுத்தபோது நிகழ்ந்தவற்றை வரிசையாக அடுக்குகிறார் ஆறு விளைவுகளை மூன்று இரட்டைகளாக இணைத்துக் காட்டுகிறார் இரண்டு கடல்கள் கலங்கின; இரண்டு மலைகள் பிளந்தன; இரண்டு நெருப்புக்கள் மூண்டன; ஆக ஆறு விளைவுகள் உண்டாயின. முருகன் வேலாயுதத்தை விட்டதனால் சூரபன்மன் ஒளிந்திருந்த கடல் சுவறியது. அசுரர்கள் எல்லாம் மாய்ந்தனர். இயல்பாக உள்ள கடலில் உண்டான விளைவோடு உருவகமாக ஒரு கடலைக் காட்டி அதில் உண்டான விளைவையும் சொல்கிறார்.

**''கறங்குதிரைக் கருங் கடலும் காரவுணப் பெருங்கடலும் கலங்க.''**

ஒலிக்கின்ற அலைகளையுடைய கரிய கடல் கலங்கியதாம். கரிய நிறம் பெற்ற அவுணர் கூட்டமாகிய கடலும் கலங்கியதாம்.

அடுத்தபடியாக மலைகளைச் சொல்ல வருகிறார். முருகன் கிரவுஞ்சம் என்னும் மலையை வேலால் பொடிபடுத்தினான். ஓர் அசுரனே அந்த வடிவாக இருந்தான். கிரவுஞ்சம் என்பது அன்றிற் பறவைக்குப் பெயர். ஆணும் பெண்ணும் இணை பிரியாமல் காதலுடன் ஒன்றி நிற்பது அன்றிலுக்கு இயல்பு. அன்றில் என்று சொன்னவுடன் அன்புதான் நினைவுக்கு வரும். ஆனால் அதன் வடிவத்தில் இருந்த கிரவுஞ்சாசுரன் அன்பே இன்றிப் பிறருக்குத் துன்பம் விளைவித்தான். சூரனுடைய தம்பியான தாருகனுக்குத் துணையாக இருந்தான். முருகன் விட்ட வேல் அந்த மலையைத் துளைத்தது.

பழங்காலத்து வரலாறுகளில் ஒரு செய்தியைக் காண்கிறோம். சூரபன்மன் தனக்குக் கவசமாகக் கிரவுஞ்ச மலையைக் கொண்டு, அதனுள் புகுந்து கொண்டு, அதனோடு எங்கும் உலாவினானாம். மலை பறக்கும் கோட்டையைப் போலப் பறந்தது. அதனுள்ளே சூரபன்மன் இருந்து தேவர்களுக்கும் பிறருக்கும் தீங்கு இழைத்தான். முருகன் விட்ட வேல் அந்த மலையையும் சூரனுடைய மார்பையும் ஒருங்கே துளைத்ததாம். ஒட்டக்கூத்தர் இந்த நிகழ்ச்சியைத் தாம் இயற்றிய தக்கயாகப் பரணியில் சொல்கிறார்.

"ஒருதோகை மிசையேறி உழல்சூரும் மலைமார்பும்
உடனூடறப்
பொருதோகை சுரராச புரமேற விடுகாளை
புகழ்பாடுவாம்."

இந்தச் செய்தியையே அருணகிரிநாதரும்,

"கிளைபட் டெழுசூர் உரமும் கிரியும்
துளைபட் டுருவத் தொடுவே லவனே."

—என்ற அநுபூதிப் பாட்டில் சொல்கிறார் என்று தோன்றுகிறது. பரஞ்சோதி முனிவர் சொல்வதும் இவ்வண்ணமே இருக்கிறது. முருகன் வேலை ஏவியபோது கிரவுஞ்சகிரியினுடைய மார்பு பிளந்தது; அதனோடு மலைபோல வலியதாக இருந்த சூரனுடைய மார்பும் பிளந்ததாம்.

" ...கார்வந்து
உறங்குசிகைப் பொருப்பும்சூர் உரப்பொருப்பும் பிளப்ப."

அடுத்தபடி இரண்டு அக்கினிகள் மூண்டன என்று சொல்ல வருகிறார். ஒன்று உண்மையான அக்கினி; மற்றொன்று உருவகமான அக்கினி. முருகன் அந்தணர் செய்யும் வேள்விகளைக் காப்பவன்.

"அந்தண்மறை வேள்வி காவற்கார"

—என்று அருணகிரிநாதர் திருவகுப்பில் பாடுவார். தேவர்களுக்கு அவியுணவை வழங்கி, அதனால் உலகம் நன்மை பெறும்படி வேள்விகளைச் செய்வார்கள் அந்தணர்கள். தேவர்களுக்குப் பகைவர்களாகிய அசுரர்கள் அவற்றைக் குலைக்க முற்படுவார்கள். முருகன் அசுரர்களை அழித்து வேள்விகளுக்குப் பகைவர்கள் இல்லாமல் செய்து அவை நன்கு நடைபெறும்படி அருளினான். அவனுடைய செயலால் முறைப்படி செய்யும் வேள்விகளில் அழல் தழைத்து ஓங்கியது அதே சமயத்தில் மற்றோரிடத்தில் வேறு ஒரு வகையான தழலும் மூண்டதாம். அசுரர்களை அழித்தமையால் அவர்களுடைய மனைவிமார்களின் வயிற்றில் துயரமாகிய நெருப்பு மூண்டது.

''......மறை உணர்ந்தோர் ஆற்றும்
அறம் குலவு மகத்தழலும் அவுணமட வார்வயிற்றின்
அழலும் மூள''

இப்படி உண்மையான கடல் ஒன்றும் உருவகமான கடல் ஒன்றும் கலங்கவும் உண்மையான மலை ஒன்றும் உருவகமான மலை ஒன்றும் பிளக்கவும், உண்மையான தழல் ஒன்றும் உருவகமான தழல் ஒன்றும் மூளவும் குமரநாயகன் வேலை விட்டான். அப்போது ஆறு இடங்களில் ஆறு நிகழ்ச்சிகள் நடந்தன. அவன் செய்தது ஒரு செயல். அதனால் விளைந்தவை ஆறு விளைவுகள். ஆறுமுகமான பொருளாகிய அவன் செய்த செயலால் ஆறுமுகமான விளைவுகள் நிகழ்ந்தன.

''கறங்குதிரைக் கருங்கடலும் காரவுணப் பெருங்கடலும்
கலங்கக் கார்வந்து
உறங்குசிகைப் பொருப்பும்சூர் உரப்பொருப்பும் பிளப்பமறை
உணர்ந்தோர் ஆற்றும்
அறங்குலவு மகத்தழலும் அவுணமட வார்வயிற்றின்
அழலும் மூள
மறங்குலவு வேல்எடுத்த குமரவேள் சேவடிகள்
வணக்கம் செய்வாம்.''

[கறங்கு திரை—ஒலிக்கின்ற அலைகளையுடைய; அவுணப் பெருங்கடல்—அசுரர் கூட்டமாகிய பெரிய கடல்; சிகை—சிகரம்; சூர்—சூரன்; உரப்பொருப்பு—மார்பாகிய மலை. மகம்—யாகம்; அவுண மடவார்—அசுரப் பெண்கள்; மறம்—வீரம்.]

உ

முருகா

# கற்பு

## கோலம்மா

''அவ்வினைக் கிவ்வினை''

கோலம்மாவுக்கு எப்போதும் தலைக்கனம் அதிகம். ''இந்தக் குடும்பத்தில் என் அதிர்ஷ்டத்தால்தான் செல்வம் கொழிக்கின்றது; நான் இந்த வீட்டுக்கு வருவதற்குமுன் சாட்பாட்டுக்கே லாட்டரி போட்டுக் கொண்டிருந்தனர். இப்போது செல்வம் தாண்டவம் புரி கின்றது. என்னமோ, நான் கால் வைத்த நேரம்; அவர் என் கை பிடித்த நேரம். லட்சுமிகடாக்ஷம் புரிந்தாள். எல்லாம் என் அதிர்ஷ் டந்தான்'' என்று இந்தப் பல்லவியைத் தினம் பலரிடம் பாடுவாள்

கோலம்மாவின் கணவர் ஒரு பரமசாது. அந்த ஊரில் கோபா லய்யர் என்றால் எல்லோருக்குமே ஒரு நன்மதிப்பு. உத்தமர் என்று பேர் பெற்றிருந்தார். ஆனால் மனைவிக்கு மிகவும் அடங்கியவர்; கோலசைத்தால் குரங்கு ஆடுவதுபோல் கோலம்மா சொற்படி ஆடு வார். அந்தம்மா 'ம்' என்றால் அவருக்கு சப்தநாடிகளும் ஒடுங்கி விடும்.

கோலம்மா சொன்னதுதான் சட்டம். அவள் பார்த்து எலியைப் புலி யென்றாலும் கோபாலய்யர் குறுக்கே பேசமாட்டார். வீட்டில் வேலை செய்வோர்கள் எல்லாரும் கோலம்மாவைப் பார்த்த மாத் திரத்தில் நடுங்குவார்கள். கோலம்மா என்றால் சிம்மசொப்பனமாக இருக்கும். அவள் சிம்மராசியில் பிறந்தவள் என்று ஊரவர்கள் பேசிக் கொண்டார்கள்.

நத்தையில் முத்துப் பிறப்பதுபோல் கோலம்மாவுசிகு ஒரு ஆண் மகவு பிறந்தது. ராஜலிங்கம் என்று பேர் சூட்டினார்கள். செல்வமாக ராஜலிங்கம் வளர்ந்தான்.

ராஜலிங்கம் பிறந்து ஐந்து ஆண்டுகட்குப்பின் ஒரு பெண் மகவு பிறந்தது. அக்குழந்தைக்கு ராஜலட்சுமி என்று பேரிட்டார்கள்.

ஆன குடும்பத்துக்கு ஆண் ஒன்று பெண் ஒன்று கூறுவார்கள். பிறகு குழந்தை பிறக்கவில்லை. சுருக்கமான குடும்பத்தில் துன்பம் அதிகம் இராது. ஜனநெருக்கமில்லாத பாதையில் வண்டி சுகமாகப் போவது இயற்கைதானே. வளமையான நிலத்தில் வாழை மரங்கள் செழித்தோங்கி வளர்வதுபோல், ராஜலிங்கமும், ராஜலட்சுமியும் செழிப்பாக வளர்ந்தார்கள்.

ராஜலிங்கம் அக்கரையாகப் படித்தான். அறிவு கூர்மையாக இருந்தது; எதையும் ஊன்றிக் கவனிப்பான். சிலரிடத்தில் அறிவு

இருக்கும்; அடக்கம் இராது. ராஜலிங்கத்தினிடம் அறிவும் அடக்கமும் கைகோத்துக் குலவின. ஏற்றமும் தோற்றமும் படைத்த அவனிடத்தில் எல்லாக் குணங்களுக்கும் சிகரம் வைத்ததுபோல தெய்வ பக்தி நிரம்ப இருந்தது. தாய் தந்தையரைத் தெய்வமாக எண்ணி மதித்தான்.

இவ்வளவு நல்ல பிள்ளையை கோலம்மா படாதபாடு படுத்துவாள். கணவனாகிய யானையை அடக்கியாளும் அவளுக்கு மகனாகிய பூனையை அடக்கியாள்வதில் என்ன சிரமம்? தாயார் கிழக்கை மேற்கு என்றாலும் ராஜலிங்கம் குறுக்கே பேசமாட்டாட்டான். நம்மைப் பத்துமாதம் சுமந்து பெற்றவள். தாய் மனம் நோவக்கூடாது என்ற ஒரே எண்ணம் அவனிடம் மேலோங்கி யிருந்தது.

ராஜலிங்கம் நன்றாகப் படித்து, கல்வி கேள்விகளில் வல்லவனானான். வல்லவனாக அவன் விளங்கியதோடு நல்லவனாகவும் விளங்கினான்.

கோபாலய்யர் தன்னுடைய ஜாதகப் பலன்படி தனக்கு நீண்ட ஆயுள் இல்லையென்று உணர்ந்தார். அதனை யாருக்கும் வெளியிடவில்லை.

சீக்கிரம் தன் மகனுக்குக் கல்யாணம் புரிந்துவிடவேண்டும் என்று எண்ணினார். தன் மனைவியுடன் கலந்து பேசினார்.

'இதற்குள் அவனுக்கென்ன கல்யாணத்துக்கு அவசரம். எல்லாம் பொறுத்துச் செய்யலாம்'' என்றாள் கோலம்மாள்.

''நமக்கு ஆண்டவன் தந்தது ஒரே மகன். இன்றிருந்தார் நாளையிருப்பர் என்பது என்ன நிச்சயம்?

''இன்றைக் கிருந்தாரை நாளைக் கிருப்பரென்று
எண்ணவோ திடமில்லையே''

என்கின்றார் தாயுமானார். நேற்றிருந்தார் இன்று இல்லை. சீக்கிரம் பையனுக்குக் கல்யாணம் செய்து என் கையால் அட்சதையிட்டு ஆசீர்வதிக்க வேண்டும் என்று ஆசைப்படுகின்றேன். நல்ல காரியம் சீக்கிரம் புரிவது நல்லது. ''சுபம் சீக்கிரம்'' என்பார்கள். கும்பகோணத்தில் குஞ்சிதபாத ஐயர் மகள் நல்ல அழகும் அடக்கமும் உடையவள். நான் அங்கு போகும்போதெல்லாம் பார்த்திருக்கின்றேன். அதை முடித்துவிடலாம்'' என்றார் கோபாலய்யர்.

''ஆமாம், நீர் இந்த பண்டாரப் பாட்டுக்களை எப்போது படித்தீர்? எனக்குத் தெரியாமல் பெண்ணையும் பார்த்துவிட்டீரோ? பேஷ். உமக்கு என்ன மனத்துணிவு? எல்லாம் சற்று பொறுத்துப் பார்ப்போம்'' என்று அடித்துப் பேசினாள் கோலம்மாள்.

கோபாலய்யர் கோலம்மாவுடன் மகாமகத்துக்குக் கும்பகோணம் போனார். குஞ்சிதபாத ஐயர் வீட்டில்தான் தங்கினார். தங்கத்தால் கடைந்த பம்பரம் போல் காட்சியளித்தாள் கோமளம். கோமளம்

கோபாலய்யரையும் கோலம்மாவையும் நமஸ்கரித்து வரவேற்றாள். கோமளத்தின் அடக்கம், அன்பு, உபசரிப்பு அழகு, கவர்ச்சி முதலிய குணங்கள் கோலம்மாவை ஒரு அசைப்பு அசைத்துவிட்டன. கோலம்மாவுக்கு அவளை நன்கு பிடித்துவிட்டது

ஜாதகம் பார்த்தாள். மிகப் பொருத்தமாக இருந்தது. முடிவில் வரதட்சிணைப் போர் நடைபெற்றது. என் மகன் நல்ல கல்வி கற்றவன். ஏற்றமும் தோற்றமும் படைத்தவன். வைர மோதிரம் போடவேண்டும். ஸ்கூடர் வாங்கித் தரவேண்டும் ஐயாயிரத்துக்கு வெள்ளிப் பாத்திரங்கள், இரண்டாயிரத்துக்கு எவர்சிலவர் ஏனங்கள், ஆயிரம் ரூபாய்க்கு வெண்கலப் பாத்திரங்கள் வாங்கித் தரவேண்டும் என்று அடுக்கிக் கொண்டே போனாள்.

பெண்ணைப் பெற்ற குஞ்சிதபாத ஐயர் எல்லாவற்றுக்கும் ஒப்புக்கொண்டார்.

சுவாமிமலை முருகன் சந்நிதியில் திருமணம் இனிது நடைபெற்றது. இடையில் எத்தனையோ சம்பந்திச் சண்டைகள் நடைபெற்றன. குஞ்சிதபாதம் ஐயர் அவற்றையெல்லாம் கவனிக்கவில்லை.

கோபாலய்யர் மருமகளையும் மகனையும் அழைத்துக்கொண்டு சென்னையில் தனக்கு என்று திருவல்லிக்கேணி சூரப்ப முதலி தெருவில் உள்ள தனது இல்லத்துக்கு வந்தார்.

ராஜலிங்கம் ரயில்வே ஆபீசில் வேலை பார்த்துக் கொண்டிருந்தான். ஞாயிற்றுக் கிழமையில் தன் அன்புக் களஞ்சியமான கோமளத்தை ஸ்கூடரில் ஏற்றிக்கொண்டு கடற்கரைக்குப் போவான். அவளுடைய அன்புக் கடலில் முழுகுவான்.

"கோமளம்! இந்தக் கடற்கரை எவ்வளவு குளிர்ச்சியாக இருக்கின்றது பார்த்தனையா?"

"இந்தக் கடலின் குளிர்ச்சியைப் பார்க்கினும் தங்கள் அன்புக் கண்பார்வை எனக்கு மிகுந்த குளிர்ச்சியாக இருக்கின்றது கடலில் உப்பு இருக்கின்றது. சுறுமீன் இருக்கின்றன தங்கள் கண்களில் அமுதம் இருக்கின்றது. கருணைத் துளிகள் இருக்கின்றன. உங்கள் கண்பார்வையைப் பார்க்கிலும் கடல் குளிர்ச்சியாக எனக்குத் தோன்றவில்லை."

"கோமு! நீ நன்றாக ஆழ்ந்த பொருட்சுவையுடன் பேசுகின்றாய் நீ நல்ல நூலாசிரியையாக இருக்க வேண்டியவள். கும்பகோணத்தில் பெரிய பெரிய மகான்கள் பிறந்து வளர்ந்தார்கள் என்று கேள்வி. இக்கடலாழம் போல் உன் பேச்சில் கருத்தாழம் செறிந்திருக்கின்றது. உன்னை நான் மனைவியாகப் பெறுவதற்கு நல்ல தவஞ் செய்திருக்கின்றேன். நீ அன்புக் கடல்; இன்பக் குன்று; குணவயல்; இன்சொல் வனம்."

"நீங்கள் நிரம்பப் படித்தவர் அதனால் சுருங்கிய சொற்களில் கடல், மலை, வயல், வனம் என்று நெய்தல், குறிஞ்சி, மருதம், முல்லை

என்ற நாவிலங்களையும் கூறிவிட்டீர்கள். உங்களைத் தெய்வமாக நான் பெற்றேனே! நான் பெற்ற பேறு வேறு யார் பெறுவார்கள்?

இவ்வளவு படித்துத் தெளிவுபெற்ற நீங்கள் அம்மாவுக்கு மிகவும் பயப்படுகின்றீர்களே? அம்மா எதிரில் என்னுடன் பேசுவதற்குக் கூட கூசுகின்றீரே.''

''கோமு! அம்மா ஒரு மாதிரியான பிறப்பு. அதுபற்றி நான் அதிகம் வெளியிட விரும்பவில்லை. மணி எட்டாகிவிட்டது. வா, போகலாம்.''

இருவரும் வீட்டை யடைந்தார்கள்.

அந்த இளந்தம்பதிகள் கடற்கரையில்தான் மனம்விட்டுப் பேசிக் கொள்வார்கள். வீட்டில் பேசக் கூசிக் கொள்வார்கள்.

திருமணம் ஆன ஆறுவது மாதத்தில் கோபாலய்யர் நோய் வாய்ப்பட்டு இறைவன் திருவடியில் சேர்ந்துவிட்டார்.

கோலம்மா மிகுதியான துன்பத்தை யடைந்தாள். இனி தான் யாரிடம் போர்புரிவது என்பதுதான் அவளுடைய துன்பத்துக்கு அடிப்படையான காரணம். உத்தரகிரியை முடிந்தது.

கோமளத்தின்மீது கொடிய காலகூட விஷம்போல் சீறி விழுந் தாள்.

''மூதேவி! துடைகாலி! தரித்திரப் பிண்டமே. நீ இந்த வீட்டில் கால் வைத்த ஆறும் மாதமே என் புருஷனை வாயில் போட்டுக் கொண்டாய்: இன்னும் இருந்தால் என் மகனையும் வாயில் போட்டுக் கொள்ளுவாய். இனி ஒரு நிமிஷம் இந்த வீட்டில் இருக்கக்கூடாது. உடனே உன் துணிமணிகளை எடுத்துக்கொண்டு புறப்படு இல்லை யேல் இந்த அரியாமணையால் உன் தலையை இருபிளவாகப் பிளந்து விடுவேன். உன்னைப் பார்த்தால் என் அங்கம் பதறுகின்றது. கோபத் தீ சிதறுகின்றது'' என்று கர்ஜனை புரிந்தாள்.

கோமளம் மாமியின் கால்மீது வீழ்ந்து ''மாமி! பெரியவர் மறைந் ததற்கு நானா காரணம்? அவரவர்கள் பிறக்கின்றபோதே இறக்கின்ற தேதியை ஆண்டவன் தீர்மானிக்கின்றான். ரயில் வண்டியில் ஏறுவ தற்கு முன்னரே இறங்குகின்ற இடம் முடிவாகின்றது அல்லவா? விதியை வென்றவர் யாவர்? தாங்கள் இந்த அபலையைக் கோபிப்பது முறையன்று. உங்களுக்கும் ஒரு பெண் இருக்கின்றாள். என்னை வாழ வைத்தால் அதுவும் நல்லபடி வாழும். கருணை செய்யும்'' என்று அழுது தொழுதாள்.

''அடியே! தரித்திரம் பிடித்த சனியனே! என் கண்மணிக்கு நீ சாபமா போடுகின்றாய்? உன்னை விட்டேனா பார்'' என்று ஓங்கி ஓங்கி அடித்தாள்.

ஆபீசிலிருந்து வந்த மகனைப் பார்த்து, ''அடே! இவள் இனி இந்த வீட்டில் இருக்கக்கூடாது. என் வார்த்தைக்கு யாரும் மறுக்கே

பேசக் கூடாது. இவளைக் கொண்டு போய்க் கும்பகோணத்தில் தள்ளி விட்டுவா. உங்கப்பன் மீது ஆணை'' என்று தாடகைபோல் முழக்கஞ் செய்தாள் கோலம்மா.

பொறுமையே வடிவான ராஜலிங்கம் ஒன்றும் பேசவில்லை. தனக்குள் சிந்திப்பானுயினுன். ''நாம் பகல் முழுவதும் ஆபீசில் இருக்கின்றோம். நம் தாய் இவளை அடித்து உயிருடன் கொன்றுவிடுவாள். எனவே நம் மனைவி தாய் வீட்டில் இருப்பதுதான் அவளுக்கு ஆறுதல்'' என்று எண்ணினன்.

அன்றிரவு மனைவியைப் பார்த்து, ''கோமளம்! என் தாயின் சுபாவம் அதிகந் தெரியாது. என் தாய் பெண் வடிவங்கொண்ட பேய். அவளுடன் நான் எதிர்த்துப் பேசியதேயில்லை. அவ்வாறு பேசினுல் பேய் தலைவிரித்தாடும். பேய் மந்திரத்தில் கட்டுப்படும். என் தாய் ஒன்றுக்குங் கட்டுப்பட மாட்டாள். நீ சிறிது காலம் தாயார் வீட்டில் இரு. காலம் போகப்போக அவளுக்குக் கடவுள் நல்லபுத்தி தருவார். நீ எங்கிருந்தாலும் என் அன்பும் பாசமும் உன்னிடந்தான் இருக்கும். நீ என் சொல்லைத் தட்டாதே. நான் நன்றுகச் சிந்தனை செய்துதான் இந்த முடிவுக்கு வந்தேன். இளம்பருவத்தில் உன்னைவிட்டுப் பிரிந்திருக்க நான் சம்மதிப்பேனு? உன் அன்பு மகமேருகிரியினும் உயர்ந்தது. மனைவி தன்னுடன் இருந்து துன்பப்படக் கூடாது என்றுதான் நளச் சக்கரவர்த்தி தமயந்தியை நள்ளிரவில் நடுக் காட்டில் விட்டுப் பிரிந்தான். அவன் மனைவியைக் காட்டில் விட்டான். நான் உன்னைத் தாய் வீட்டில் விடுகின்றேன். நீ மதிநலம் படைத்தவள்'' என்றுன்.

கோமளம் அவன் மார்பில் தன் முகத்தை அழுத்தி விம்மிவிம்மி யழுதாள். அவளுக்கு வார்த்தைகளே வாய்விட்டு வரவில்லை. சொற்கள் தடுமாறின.

''என் அன்பே! இனி எனக்கு வாழ்வே இல்லையா? நீர் என்னைத் தாய் வீட்டில் விடுவதைப் பார்க்கிலும் கடலில் தள்ளிவிடும். நான் ஆத்மசாந்தி யடைகின்றேன். எனக்குத் தாய், தந்தை, குரு, கணவன், தெய்வம் எல்லாம் நீங்கள்தானே? உங்களைப் பிரிந்து நான் எப்படி வாழ்வேன்?'' என்று விக்கி விக்கிக் கூறியழுதாள்.

அவளுடைய ஆற்றெணுத் துயரத்தைக் கண்டு ராஜலிங்கமும் அழுதான். ஒருவாறு மனதைத் திடப்படுத்திக் கொண்டான்.

''கோமளம்! என் நெஞ்சே வெடித்துவிடும் போல் துயரமடைகின்றேன். நீ என் துயரத்தை மாற்றவேணும் என்றுல் கொஞ்ச காலத்துக்குக் கும்பகோணத்தில் இரு'' என்று கூறி அவளைச் சமாதானப்படுத்தினுன். அன்றிரவு முழுவதும் அவர்கட்குச் சோகம் நிறைந்த சிவராத்திரியாகிவிட்டது.

மறுநாள் ஆபீசுக்கு லீவுலெடர் எழுதித் தந்துவிட்டு மனைவியை அழைத்துக் கொண்டு புறப்பட்டான்.

கோமளம் மாமியை விழுந்து கும்பிட்டு "மாமி! போய் வருகின்றேன்" என்றாள்.

"போய் வருவதா! ஏன் மறுபடியும் வருகின்றாய்? அப்படியே தொலைஞ்சு போ! அஷ்ட தரித்திரமே! என் வீட்டுக்கு வந்த எட்டாமிடத்துச் சனியே! போ, போ தொலைஞ்சு போ" என்றாள் கோலம்மாள்.

இந்த வசவுமொழிகள் கோமளத்தின் இதயத்தைப் பிளந்தன அழுது கொண்டே தன் நாத்தியைப் பார்த்து "அம்மா! வருகின்றேன்" என்று கூறிவிட்டுப் புறப்பட்டாள். ராஜலட்சுமி தாயின் கொடுமையை நோக்கி மனம்புழுங்கி தன் அண்ணியைப் பார்த்து அழுது கொண்டே நின்றாள்.

ராஜலிங்கம் தன் அன்புக் கருவூலத்தைக் கும்பகோணத்தில் விட்டு விட்டு கொஞ்ச காலத்துக்கு இங்கிருக்கட்டும் என்று பொதுவாகக் கூறிவிட்டு மனைவி கையில் நூறு ரூபாய்களைத் தந்துவிட்டு சென்னை சேர்ந்தான்.

கோலம்மாவுக்கு இப்போது தான் மனநிம்மதி யுண்டாயிற்று.

"அடேய்! நீ இனி கும்பகோணம் இருக்கின்ற திசையில்கூட தலை வைத்துப் படுக்காதே. அவளைக் கனவிலும் நினைக்காதே. தொடை காலி. மாமனாரைக் கொன்ற மாயக்காரி..." என்று அடுக்கடுக்காக வையத் தொடங்கினாள்.

ராஜலிங்கம் பதில் பேசாமலும், உணவு உண்ணாமலும் கோட்டை மாட்டிக் கொண்டு ஆபீசுக்குப் போனான் வேலையில் மனம் செல்ல வில்லை. சகலமும் இழந்துவிட்டவன் போல் பரதவித்தான். அவன் முகம் வாடிச் சுருங்கிக் கருகிவிட்டது.

கும்பகோணத்தில் கோமளம் உண்ணாமலும் உறங்காமலும் அசோகவனத்தில் சீதாதேவி இருந்ததுபோல் துயரக்கடலில் மூழ்கி இருந்தாள்.

ஓராண்டு கழிந்தது. ராஜலட்சுமிக்குக் கல்யாணஞ் செய்து மருமகனைத் தன் வீட்டிலேயே வைத்துக்கொள்ள வேண்டும் என்று திட்டமிட்டாள் கோலம்மாள்.

எழும்பூரில் டாக்டர் படிப்பு படித்த சுகவனம் என்ற வரனைத் தேர்ந்து எடுத்தாள். திருமணப் பத்திரிகை அச்சிட்டு ஊர் முழுவதும் கொடுத்தாள். கும்பகோணத்துக்கு மட்டும் அனுப்பவில்லை ராஜலிங்கம் இந்தக் கல்யாணத்திலாவது தன் மனைவி வந்து சேருவாள் என்று எதிர்பார்த்தான். அது நடக்கவில்லை.

அவன் அளவற்ற வேதனை யடைந்தான்.

பார்த்தசாரதிப் பெருமாள் கல்யாண மண்டபத்தில் கல்யாணம் என்று எல்லா ஏற்பாடுகளும் தடபுடலாக நடந்து கொண்டிருந்தது. மாப்பிள்ளையை அலங்கரித்த காரில் பலவிதமான மேளதாளங்களுடன் வாணமுழக்கத்துடன் அழைத்து வந்தார்கள். கோலம்மா ஓடியோடி வேலை பார்த்தாள்; வந்தவர்களையெல்லாம் வரவேற்றுள் மாப்பிள்ளையைப் பார்த்துப் பார்த்துப் பூரித்துப் போனாள். வளைய வளைய வந்து, சம்பந்திகளை உபசரித்தாள். உள்ளம் உவந்து ஆனந்த வெள்ளத்தில் அழுந்தினாள்.

மாப்பிள்ளை காரைவிட்டு இறங்கிக் கல்யாண மண்டபத்துக்குள் நுழைந்தான். உடனே ஒரு பெரிய அதிர்ச்சி. இன்பமும் துன்பமுங் கலந்ததுதானே உலகம். ஓ என்ற அழுகுரல் எழுந்தது. மாப்பிள்ளையின் தகப்பனார் மாரடைப்பால் மாண்டுவிட்டார். எல்லோருடைய முகத்திலும் ஈயாடவில்லை; உறவினர்கள் கதறிப் பதறி யழுதார்கள்.

கோலம்மாவின் தலையில் வைர இடி விழுந்து உடம்பைப் பிளந்து கொண்டு கால்வரையிறங்கி நிலத்தில் பதிவதுபோல் இருந்தது. அவள் கதிகலங்கி மதிகலங்கிப் பேயறைந்ததுபோல் ஒரு புறத்தில் உட்கார்ந்தாள். சிரிப்பொலி போய் அழுகையொலி ஒலித்தது. அவள் செய்திருந்த பிரம்மாண்டமான கல்யாண ஏற்பாடுகள் கச்சேரிகள் யாவும் நின்றுவிட்டன.

அந்த இடத்தில் ' பாவிப்பெண் கால் வைப்பதற்கு முன்னரேயே மாமனாரைக் கொன்றுவிட்டாள்'' என்று தன் அருமை மகளைப் பலரும் நிந்தித்த வசையுரைகள் அவள் காதில் நாராசம்போல் வீழ்ந்தது. அவள் அப்போது அடைந்த துன்பத்துக்கு அளவு ஏது'

தயார் செய்த உயர்ந்த சாப்பாடு சாப்பிடுவதற்கு ஆள் இன்றிக் கெட்டு ஒழிந்தது. ராஜலிங்கம் தன் தங்கையின் திருமணம் இப்படித் தடைபட்டதற்குப் பெரிதும் வருந்தினான். கோலம்மாள் ஒரு வண்டி வைத்துக்கொண்டு சூரப்ப முதலி தெருவுக்கு வந்து சேர்ந்தாள்.

அதுமுதல் அந்த வீட்டில் அவள் குரல் ஒலிக்கவில்லை பெட்டிப் பாம்புபோல அடங்கிவிட்டாள். அவள் மனதில் பலவித எண்ணங்கள் எழுந்து கொழுந்துவிட்டு எரிந்தன.

உறவினர்கள் பலரும் ''கோலம்மாவின் மகள் ராஜலட்சுமி அதிர்ஷ்டக்கட்டை, மாமனாரைக் கொல்லும் பாவஜாதகம் உடையவள். அவளைக் கல்யாணம் இனி யார் செய்து கொள்வார்கள்? என்றே பேசிக்கொண்டார்கள்.

கோலம்மாவைப் பார்க்க வருபவர்கள் யாவரும் ''என்னம்மா இப்படி நடந்துவிட்டதே. உன் மகள் பாவ ஜாதகமுடையவள்'' என்று கூறி துக்கம் விசாரித்தார்கள்.

கோலம்மா தனக்குள் எண்ணுவாள். நமது மருமகளை நாம் வாழவிடவில்லை. அவளை அடித்து இடித்து தாய் வீட்டுக்கு அனுப்பி

விட்டோம். அவளாவது ஆறுமாதம் புருஷனுடன் வாழ்ந்தாள் நம்ம பெண் அரை நிமிஷங்கூட வாழவில்லையே? இனி இவளுக்கு எப்படிக் கல்யாணம் ஆகும்! இனி என் பெண் வாழ வழியேயில்லை. அன்று அவள் சொன்னாள். 'மாமி! உனக்கும் ஒரு பெண் இருக்கின்றாளே. என்னை வாட்டி வதைக்கலாமா?' என்று கூறியழுதாள் அவள் அழுத கண்ணீர் நமது தலையில் வஜ்ராயுதமாக வந்துவிழுந்தது. ''அவ்வினைக்கு இவ்வினை''. இந்தத் துன்பத்துக்கு மருந்து, குற்றமில்லாத குணவதியை வாழ வைப்பதுதான்'' என்று கருதினாள்.

தன் பிழையை நினைந்து நெஞ்சம் உருகினாள்.

இப்போது என்ன செய்வது? எப்படிப் போய் மருமகளை அழைப்பது என்று சிந்தித்தாள்.

நல்ல நாள் பார்த்துப் புறப்பட்டாள். ராஜலிங்கத்தினிடமும் கூறவில்லை. நேரே ராமபாணம் போல் கும்பகோணம் போனாள் சம்பந்தி வீட்டுக்குச் சென்றாள். மருமகளைப் பார்த்தாள். அவள் துரும்பாக இளைத்துப் போயிருந்தாள். தலைவாரி முடிக்காமலும், முகத்தில் பொட்டு இட்டுக் கொள்ளாமலும், துன்பத்தைச் சித்திரித்து ஒரு ஓவியன் தீட்டிய சித்திரம்போல் இருந்தாள், அந்தப் பரிதாப நிலையைக் கண்டு அவளது உருகாத உள்ளம் உருகியது.

''அம்மா! நீ வருந்தாதே. உன் அழுகைக் கண்ணீர் என் கொடுமை யழுக்கைக் கழுவிவிட்டது. இனி நீதான் என் குடும்பத்தை வாழ வைக்க வேண்டும்'' என்று கண்ணீர் சிந்திக் கூறினாள். சம்பந்திகளிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டாள். மருமகளுடன் சென்னை வந்து சேர்ந்தாள்.

ஆபீசிலிருந்து வீட்டுக்கு வந்த ராஜலிங்கம் தன் மனைவியைக் கண்டு திகைத்துப் போனான். ''பிரிந்தவர் கூடினால் பேச வேண்டுமோ?''

கணவனும் மனைவியும் ஒன்றுபட்டு இன்புற்றார்கள். கோலம்மாவுக்குத் தன் மகள் திருமணம் இனி எப்படி நடக்கும் என்ற சிந்தனை தான் சதா வாட்டி வதைத்தது.

ஒருநாள் கோமளம், ' மாமி! நீங்கள் வருந்தாதீர்கள். என் தம்பி பி, ஏ படித்தவன். கும்பகோணத்தில் அரசினர் துறையில் வேலை கிடைத்து முந்நூறு ரூபாய் சம்பளம் வாங்குகின்றான் அவனுக்கு ராஜலட்சுமியைக் கல்யாணம் செய்து வைக்கலாம். நான் எங்கப்பாவுக்கும் தம்பிக்கும் எழுதி ஏற்பாடு செய்துவிட்டேன்'' என்றாள். இந்த சொல் கோலம்மாவின் காதில் அமுதம்போல் விழுந்தது அது படியே கல்யாணமும் நடந்தது. ராஜலட்சுமி கும்பகோணத்திலும், கோமளம் சென்னையிலும் இனிது வாழ்ந்தார்கள்.

கோலம்மாளின் கொடுங்கோல் செங்கோலாக மாறியது மிகுதியாகப் புளிக்கின்ற மல்கோவா பழுத்துவிட்டால் மிகுதியாக இனிக்

உ

முருகா

# சாந்தி பருவம்

# மகாபாரதம்

---

48—ஆம் பக்கத் தொடர்ச்சி

## சோம்பல் கொடிது

தருமர் "ஞானசேகரரே! அரசன் எதைச் செய்தால் சுகம் அடைவான்?" என்று கேட்டார்.

பீஷ்மர் "அரசனே! சோம்பலின்றி சுறுசுறுப்பாக எவன் கடமைகளைச் செய்கின்றானோ அவன் சுகப்படுவான். சோம்பல் மனிதனை அடியுடன் அழித்துவிடும். இதுபற்றிய ஒரு ஒட்டகத்தின் கதையைக் கூறுகின்றேன் கேள்.

பிரஜாபதியின் குலத்தில் உதித்ததும், முற்பிறப்பின் அறிவுள்ளதுமான ஒரு பெரிய ஒட்டகம் காட்டில் கடுந்தவஞ் செய்து கொண்டிருந்தது. அதன் தவத்திற்கு இரங்கி பிரமதேவர் தோன்றி, "ஒட்டகமே! உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள்" என்று வினவினார். ஒட்டகம், "நான்முகக் கடவுளே! காட்டில் உணவுக்காகத் திரிவது மிகுந்த வேதனையாக இருக்கின்றது. இருந்த இடத்திலிருந்தே நான் உணவைத் தேடிக்கொள்ள விரும்புகிறேன். என் கழுத்து நூறு யோசனை நீளம் உள்ளதாக இருக்கவேண்டும்" என்று வரம் கேட்டது. அந்த வரத்தை யளித்து வாணிகேள்வர் மறைந்தார். அறிவில்லாத அந்த ஒட்டகத்தின் கழுத்து நூறு யோசனை நீண்டுவிட்டது. சோம்பலே ஒரு வடிவான ஒட்டகம் மகிழ்ந்தது.

ஒட்டகம் இருந்த இடத்திலிருந்தே கழுத்தை நீட்டிநீட்டி வேம்புகளின் தழையை ஒடித்துத் தின்று கொண்டு படுத்திருந்தது. காற்றும் மழையுங் கலந்தடித்தன, ஒட்டகம் நனைந்து குளிரால் வருந்தியது. நூறு யோசனை நீளமுள்ள கழுத்துடன் அது வசிக்கக்கூடிய குகை எது? ஒரு குகைக்குள்ளே தன் தலையை நுழைத்துக் கொண்டது. மழைக்கு அஞ்சிய ஒரு நரி தன் மனைவியுடன் அக்குகையில் பதுங்கியிருந்து பட்டினியால் துயரம் அடைந்திருந்தது. அக்குகையில்

---

கும். அதுபோல் ஆனாள் கோலம்மாள். மருமகளிடம் அவளுக்கு ஒரு அச்சமும் ஏற்பட்டுவிட்டது. மிகுந்த அன்பாக அவளிடம் நடந்து கொண்டாள்.

பூஜையறை யுண்டு தானுண்டு என்று இருந்தாள். ராஜலிங்கம் தாயின் குணமாற்றத்தைக் கண்டு மட்டற்ற மகிழ்ச்சி யடைந்தான். எல்லாம் ஈசன் அருளும், கற்புடைய தன் மனைவியின் குணநலமுமே என்று எண்ணி உள்ளம் உவந்தான். கோமளம் இந்திர பவனத்தில் வாழும் புண்ணியசாலி போல் கணவனுடன் களித்து இன்புற்றாள்.

நுழைந்த ஒட்டகத்தின் கழுத்தைக் கண்டவுடன் களிப்புற்று கழுத்தைக் கரும்புபோல் கடித்துத் தின்றது. ஒட்டகம் கழுத்தைச் சுருக்க முடியாது மாண்டது. ஆதலால் சோம்பல் அழிவைத் தரும். அறிவினால் செய்யப்படும் காரியம் உத்தமம்; சௌகரியத்தால் செய்யப்படும் காரியம் மத்திமம்; சரீரவலிமையால் திரிந்து செய்யுங் காரியம் அதமம். சுமை தூக்கும் வேலைகள் அதமாதமம். எனவே அறிவுடனும் முயற்சியுடனும் நல்ல கருமங்களைத் தாமதம் இன்றிச் செய்ய வேண்டும்.

## வணக்கத்தின் பெருமை

### கடலும் நதிகளும்

தருமர், "உத்தமரே! அரசன் அரசை யடைந்தும் வலிமையும் போதிய துணையும் இல்லாதபோது எப்படி நடக்கவேண்டும்?" என்று கேட்டார்.

பீஷ்மர் "பாரத! இதுபற்றி கடலும் நதிகளும் உரையாடிய சிறந்த நிகழ்ச்சி ஒன்றைக் கூறுகின்றேன் கேள். நதிகளுக்குப் பதியாகிய கடலில் எல்லா நதிகளும் போய்ச் சேரும். நதிகளின் கரையிலுள்ள வானளாவிய மரங்கள் வேருடன் பெயர்ந்து நதிகளில் மிதந்து போய் கடலையடையும். ஆற்றின் கரையில் உள்ள நாணல்களும் தர்ப்பைகளும் நதியில் மிதந்துபோய் கடலில் சேருவதில்லை. கடல் நதிகளைப் பார்த்து, "நதிகளே! உங்கள் கரையில் உங்கள் அலைகளாகிய கரங்களால் நீர்வார்த்து மைந்தர்களைப் போல நீங்கள் வளர்த்த வானோங்கிய மரங்களை வேருடன் சாய்த்துக் கொண்டுவந்து பலமுறை என்னிடம் சேர்க்கின்றீர்கள். ஆனால் மிகவும் மெல்லிய நாணல் நீர் நொச்சி முதலியவைகளை என்பால் சேர்ப்பதில்லை. இதற்கு என்ன காரணம்? அவைகள் சிறியவைகள்தானே. அவைகள் உமக்கு ஏதாவது உபகாரம் செய்தனவா?" என்று கேட்டது.

கங்காநதி அறிவுள்ள சொற்களைச் சொல்லத் தொடங்கியது. "ஏ கடலரசே! நாங்கள் வளர்த்த மரங்கள் வெள்ளம் வருகின்ற போது விறைத்து நிற்கின்றன; வணங்குவதில்லை. நாணல்களும் நீர் நொச்சிகளும் வெள்ளத்தைக் கண்டு 'அம்மா!' என்று எங்களை வணங்கிப் பணிகின்றன. வணங்காத மரங்களை அடியுடன் பெயர்த்துக் கொண்டு வருகின்றோம். வணங்கியவைகளை வாழவைக்கின்றோம். வணங்கினவர்கள் வாழ்வார்கள். வணங்காதவர்கள் தாழ்வார்கள்" என்று கூறியது. ஆதலால் நல்லறிவுள்ளவன் தன்னிலும் மேலானவனிடம் பணிவுடன் நடக்க வேண்டும். "அடக்கம் ஆயிரம் நலன்களைத் தரும். அடங்காமை மனிதனை யழித்துவிடும். பகைவனுக்கு அதிக வலிமையுளது என்று அறிந்தால் நாணலின் நடையை மேற்கொள்ள வேண்டும்" என்றார். (தொடரும்)

## சந்தா நேயர்களுக்கு முக்கிய அறிவிப்பு

அச்சுக்கூலி ஏற்றத்தாலும், அச்சுத்தாள் விலையேற்றத்தாலும் ஏற்படும் அதிகச் செலவை ஓரளவு இதுகாறும் சமாளித்து வருகின்றோம். இதற்கிடையே மத்திய அரசினர் சிறிய பத்திரிகைகளுக்கான தபாற்கட்டணத்தை ஒன்றுக்கு இரண்டரைப் பங்காக உயர்த்திவிட்டனர். மற்ற தபாற் கட்டணங்களையும் கூட்டிவிட்டனர். ஆக இவ்வாறு இதுபொழுது ஏற்பட்டுள்ள அதிகச்செலவுகளைச் சமாளிக்க ஆண்டுச் சந்தாத் தொகையை மேலும் கூட்டவேண்டிய நெருக்கடி ஏற்பட்டுள்ளது. எனவே அன்பர்கள் அடியிற் குறிப்பிட்டுள்ள ஆண்டுச் சந்தாத் தொகைக்கும் தாங்கள் அனுப்பியுள்ள தொகைக்குமுள்ள குறைத்தொகையை விரைவில் அனுப்பிவைக்க வேண்டுகின்றோம்.

கீலக ஆண்டு முதல் ஆண்டுச் சந்தா

| | | |
|---|---|---|
| இந்தியா, இலங்கை | ... | ரூ. 3-50 |
| மற்ற நாடுகள் | ... | ரூ. 5-50 |

மானேஜர், திருப்புகழமிர்தம்
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை-2,

---


புதிய ஜவுளி ! கரூர் விலை ! !

# ஸ்ரீ ஜோதிலெக்ஷுமி விலாஸ்

## ஜவுளிக்கடை

தெற்கு வீதி : : சிதம்பரம்.

நயமான நல்ல சரக்கு; விலை சகாயம்; குறைந்த லாபத்தில் விற்பனையாகின்றது. உண்மையும் உழைப்பும் உடைய வியாபாரம், புதிய பார்டர்கள், உத்தரவாதமுள்ள சாயம். பலவூர் கலர் புடவைகளும், வேட்டிகளும் கிடைக்கும்.

ஒரே விலையில் விற்கும் நாணயமுள்ள கடை
ஒரு முறை பார்த்தவருக்கு உண்மை விளங்கும்.

உரிமையாளர் : D. வீரப்ப முதலியார்


---

## அன்பர்கள் கவனத்துக்கு

நமது காரியலாயத்துக்கோ, ஆசிரியருக்கோ எழுதப்படும் கடிதங்களுக்குப் பதிலை விரும்புவோர் பதிலுக்காக கார்டோ, தபால் தலைகளோ அனுப்பினாலொழிய பதிலனுப்ப வசதிப்படாது.

மானேஜர், திருப்புகழமிர்தம்.

Registered with the Registrar of Newspapers for India under R. N. 1109/57.

உ
முருகா

தந்தி : முருகா 3293

**கல்யாணங்களில்**

கலை வல்லாரின் கைத்திறத்துடன்
இதயம் கவர் வண்ணங்களில் கண்கவரும்

# பட்டு, நூல் & கைத்தறி

புத்தாடைகள் எடுத்து — உடுத்து
மகிழ வாரீர்!

# ஜெ. மு. சாமி

(பெரிய விளக்குத்தூண் சமீபம்)

கீழ மாசி வீதி : : மதுரை-1.

தபால் பெட்டி எண். 203

| Head Office :— | Central Office :— |
|---|---|
| நிர். 1, | கடைவீதி, |
| பெரிய சௌராஷ்டிரா தெரு, | தபால் பெட்டி எண் 8, |
| உறையூர், P. O. | நாகப்பட்டினம் |
| திருச்சிராப்பள்ளி-3. | |
| தந்தி : முருகா போன் : 4849 | தந்தி : முருகா போன் : 18 |

Associated Firm :

"முருகவிலாஸ்"

P. V. J. முனிசாமி செட்டியார் & கோ.,

ஜெயங்கொண்டசோழபுரம்,

(வழி) கும்பகோணம். தந்தி : முருகா

Edited by Sri KIRUPANANDAVARI & Published by M. Madusoodanas Sivam, 89, Singanna Chetty Street, Madras-2. Printed by K. M. John at Jeevan Press, 8, Titarappa Mudali Street, Triplicane, Madras-5.